POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G. 6. TN. MS. C. P. P. 5‡

ANNA Leading Progressive Tamil Daily of the People

# புரட்சிதலைவரின் கூட்டணியை வெற்றிபெற செய்வோம்

Regd. No. TN - MS (C) 244 Phone: 420212 4 பக்கம் விலை 60 காசு

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 10] சென்னை 3.2.1986 திங்கள் வெளியீடு 4.2.1986 செவ்வாய் [இதழ் 104

### அண்ணா நினைவிடத்தில் கழக முன்னணியினர்-தொண்டர்கள் சபதம்

**சென்னை, பிப். 3-உள்ளாட்சித் தேர்தலில் முதல்வர் புரட்சித்தலைவரின் கூட்டணி வேட்பாளர்களை அமோக வெற்றிபெறச் செய்வோம் என அண்ணா நினைவிடத்தில் கழக முன்னணியினர் மற்றும் ஆயிரக்கணக்கான கழகத்தவர்கள் சபதம் ஏற்றனர்.**

பேரறிஞர் அண்ணாவின் நினைவுநாளை யொட்டி மவுன ஊர்வலத்திற்குப் பிறகு நடைபெற்றகூட்டத்தில் டாக்டர் நாவலர் பேசியதாவது:—

நம்முடைய உள்ளத்தில் குடிகொண்டிருக்கும் அண்ணா மறைந்து 17 ஆண்டுகள் உருண்டோடிவிட்டன.

நமக்கு உணர்ச்சியையும், எழுச்சியையும் ஊட்டிய அண்ணா நம்முடைய நெஞ்சை விட்டு அகலாமல் நீக்கமற நிறைந்து இருக்கிறார்.

தந்தை பெரியாரின் கொள்கைகள் அண்ணாவின் செயல் திட்டங்கள் ஆகியவைதான் என்னுடைய நடைமுறை என்று ஆட்சிப் பொறுப்பேற்று பொன்மனச்செம்மல் டாக்டர் புரட்சித்தலைவர் சிறப்பாக ஆட்சி நடத்திவருகிறார்.

புரட்சித்தலைவர் ஆட்சியை நல்லவர்கள் -வல்லவர்கள். போற்றுகிறார்கள், பாராட்டுகிறார்கள் அண்ணாவின் உடல் மறைந்துவிட்டாலும் அவருடைய ஒலி—பேச்சுக்கள் நம்முடைய செவிகளில் ஒலித்துக் கொண்டேயிருக்கிறது. இங்கே இந்த நினைவிடத்திலும் அந்த ஒலி ஒலித்த வண்ணம் உள்ளது,

நம்மையெல்லாம் ஆளாக்கிய பெருமை அண்ணாவுக்கு உண்டு.

கடந்த ஆண்டு இதே பிப்ரவரி மாதம் 4ந் தேதி அன்று அமெரிக்காவில் இருந்து சிகிச்சை முடிந்து 3ம் பிறவி எடுத்து புரட்சித் தலைவர்வந்தார்.

#### மூன்றாம் முறையாக...

மூன்றாம் முறையாக ஆட்சி பீடத்தில் முதல்வராக அமர்ந்தார். அண்ணா மாவட்டத்தை உருவாக்கினார்,

அண்ணாவின் பெருமை என்றென்றும் நிலைக்க பாடுபட்டு வருகிறார். பாருள்ளளவும், கடல் நீர் உள்ளளவும் அண்ணாவின் புகழ்நிலைத்திருக்க புரட்சித்தலைவர் முயற்சிகளை மேற்கொண்டுள்ளார்.

எந்த இடத்தில்இரட்டை இலை வெற்றி பெற்றதோ அந்த இடத்தில் திண்டுக்கல்லை தலைநகராகக் கொண்டு அண்ணா மாவட்டத்தை புரட்சித் தலைவர் உருவாக்கியிருக்கிறார்.

அண்ணா விருதுபுரட்சித் தலைவருக்கு வழங்கப்பட்டிருக்கிறது.

அண்ணாவின்கொள்கை-கோட்பாடுகளை பின்பற்றி திக்கற்றவர்களுக்கு வாழ்வளிக்க ஆதிதிராவிடர்களுக்கு 5லட்சம் வீடுகளும்பிற்பட்டஏழைஎளிய மக்களுக்கு 5லட்சம் வீடுகளும், ஆக 10லட்சம் வீடுகள் வரும் நிதிஆண்டில்கட்டப்படும் என்றஅறிவிப்பை வெளியிட்டிருக்கிறார் ஏழு மாநிலங்களை உள்ளடக்கிதென்னக பண்பாட்டு மையம் திருவையாற்றில் உருவாகும். விழாவைபிரதமர்ராஜீவ் துவக்கிவைத்திருக்கிறார்.

புரட்சித்தலைவர் அந்த விழாவில் பங்கேற்று வீணையை பரிசாக வழங்கியிருக்கிறார்,

#### சூளுரை

அனைத்திந்தியஅண்ணா தி. மு. கழக அரசுக்கு மக்கள் முழு ஆதரவு தந்து வருகிறார்கள். புரட்சித் தலைவர் மீது அவர்கள் வைத்திருக்கும் நம்பிக்கையைக் காட்டும் வகையில் செய்யாறு இடை தேர்தலில் எதிர்பார்த்ததற்கு மேல் கூடுதலான வாக்குகளை அள்ளித்தந்திருக்கிறார்கள். அண்ணாவின்நினைவிடத்தில் இன்று நாம் சூளுரை மேற்கொள்கிறோம்.

உள்ளாட்சி மன்றத் தேர்தல் வருகிறது.ஊராட்சித்தலைவர்கள் ஒன்றியத் தலைவர்கள்உறுப்பினர்கள் நகராட்சித் தலைவர்கள் ஆகியோரை நாம் தேர்ந்தெடுக்கவேண்டும். நாம் அனைவரும் ஒருமித்து நின்று புரட்சித்தலைவரின் கூட்டணியை மீண்டும் வெற்றிபெற வைக்கவேண்டும். இந்தக் கூட்டணிக்கு முழு வெற்றி தேடித் தரவேண்டும் இந்த கூட்டணி வெற்றி பெற்றால், மாநில அரசு போடும் திட்டங்கள் மக்களுக்குப் போய்ச்சேரக் கூடிய நிலைமை ஏற்படும் திட்டங்களின் பலன் மக்களுக்குச் சேர முடியும். இநதத்தேர்தலில் வெற்றி பெறுவதன் மூலம் அடுத்தடுத்து நடைபெறும் தேர்தலில் இது வலுவை சேர்க்கும், கூட்டணி வேட்பாளர்கள் எல்லா இடங்களிலும் வெற்றி பெறவேண்டும்.

#### முழுவெற்றி

தேர்தலுக்கு நிற்கும் வேட்பாளர்கள் அனைவரும் புரட்சித்தலைவராலே தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் வேட்பாளர் யார், எவர் என்று பாராமல், இரட்டை இலை சின்னத்திலும் கைச் சின்னத்திலும் வாக்கு அளித்து முழு வெற்றி தேடித்தர வேண்டும் அதன் மூலம் புரட்சித்தலைவரின் புகழ் மேலும் உயர வேண்டும்.

அந்த மகத்தான வெற்றியை தேடித்தாருங்கள் கூட்டணி வெற்றி பெற முழு மூச்சுடன் பணியாற்றுங்கள்.

இந்த அரசுஉழவர்களின் அரசு, உழைத்துப் பிழைப்பவர்களின் அரசு என்று அன்று அண்ணா சொன்ன கருத்து இன்றைய புரட்சித் தலைவரின் ஆட்சிக்கு பொருந்துகிறது அண்ணாவின் லட்சியம்வெற்றிபெற அண்ணா கண்ட கனவுகளை நனவாக்க புரட்சித்தலைவர் பாடு பட்டு வருகிறரர்.

இவ்வாறு டாக்டர் நாவலர் கூறினார்.

---

### புரட்சித் தலைவர் நீடூழி வாழ யாகம்

சென்னை, பிப். 3—பொன்மனச் செம்மல் புரட்சித் தலைவரும், தமிழக மக்களும் பூரண நலம் பெற்று சுபிட்சமாக வாழ தமிழகத்திலேயே முதன் முறையாக இரு நாட்கள் யாகம் நடைபெறுகிறது. இந்த யாக இறுதி நிகழ்ச்சியில் முதல்வர் புரட்சித் தலைவர் பங்கேற்கிறார்.

முதல்வர் புரட்சித் தலைவர் மூன்றாம் பிறவி எடுத்து முழு மதியாய் தாயகம் திரும்பிய நாள் பிப்ரவரி 4—ந்தேதியாகும். முதல்வர் புரட்சித்தலைவர் அமெரிக்காவிலிருந்து புறப்பட்டு சென்னைக்கு வந்து சேர்ந்த நேரம் முழுவதும் இடைவிடாமல் இந்த வேள்வி நடத்தப்படுகிறது.

இத்த வேள்வி இன்று காலை 5 மணிக்கு தியாகராயநகர் ராமகிருஷ்ண வித்யாலயா மேல்நிலைப் பள்ளியில் துவங்கியது. காலையில் கணபதி பூஜை நடைபெற்றது. மஞ்சக்கொடி ராஜகோபால சாஸ்திரி இதை துவக்கினார்.

இந்த யாகத்தை தம்பு செட்டித் தெரு காளிகாம்பாள் கோவில் பிரதம அர்ச்சகர் சாம்பமூர்த்தி சிவாச்சாரியார் தலைமை ஏற்று நடத்துகிறார்.150க்கும் மேற்பட்ட வேத விற்பன்னர்கள், 200 சிவாச்சாரியார்கள், 200 வேத பாட சாலை மாணவர்களும் பங்கேற்று வேதங்களை ஓதி வருகின்றனர்.

இன்று இரவு 1 மணிக்கு சதசண்டி ஹோமம் நடைபெறுகிறது. நாளைகாலை மகாபூர்ண ஆகுதியாகம் நடைபெறுகிறது இந்த யாகத்தின்போது முதல்வர் புரட்சித்தலைவர் பங்கேற்க இருப்பதாகவும் தமிழகத்திலேயே இதுபோன்ற யாகம் நடத்துவது இதுவே முதன்முறை என்றும் இது போல் இரண்டு நாட்கள் தொடர்ந்து யாகம் நடைபெறுவதும் இதுவே முதன் முறை என்றும் கோவைத் தம்பி கூறினார்.

இன்று காலை இந்த வேள்வியின்போது அமைச்சர்ராசாராம்வந்திருந்தார்.

---

### தி. மு. க. வேட்பாளர் பஞ்சம்

நெல்லை. பிப். 3—அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம் தோன்றிய நாள் முதலாய் தி.மு.கழகத்திற்கு வாக்காளர் பஞ்சம் ஏற்பட்டிருப்பது நாடு அறிந்த நல்ல செய்தியாகும்.

இப்போது வேட்பாளர் பஞ்சமும் ஏற்பட்டிருக்கிறது.

அண்மையில் நடைபெறவிருக்கும் நகராட்சி பேருராட்சி ஊராட்சி ஒன்றியத் தேர்தல்களில் பலப் பல தொகுதிகளில் பலர் திமுக வேட்பாளராக பலவந்தமாக நிறுத்தப்பட்டிருக்கிறார்கள்.

இன்னொருருசிகர சம்பவம் வேட்பாளர்களின் அனுமதியின்றியே பலர் தி.மு.க. வேட்பாளர்களாக அறிவிக்கப் பட்டிருக்கிறார்கள் அவர்கள் ஆளை விட்டால் போதும் என்று தி. மு. க. முத்திரையை உதறிவிட்டு ஓடிக் கொண்டிருக்கிறார்கள்.

நெல்லை மாவட்டம் பாளையங்கோட்டை நகராட்சி தேர்தலில் 21வது வட்டத்தில் எஸ். லட்சுமணன் தனது வேட்பாளராகப் போட்டியிடுகிறார் என்று தி, மு. கழகம் அறிவித்திருந்தது.

ஆனால் அவரோ தான் தி. மு. க, வேட்பாளர் அல்ல என்றும் சுயேச்சையாகத்தான் போட்டியிடுவதாகவும் அறிவித்திருக்கிறார்.

---

### அண்ணா நினைவு நாள் சென்னையில் அமைதிப் பேரணி - அஞ்சலி

சென்னை, பிப். 3—பேரறிஞர் பெருந்தகை அண்ணா அவர்களின் 17ம் ஆண்டு நினைவு நாளையொட்டி தலைமைக் கழகத்தின் சார்பில் மாபெரும்மவுன ஊர்வலம் நடந்தது.

பல்லாயிரக்கணக்கான கழகத் தோழர்கள் மவுன ஊர்வலத்தில் கலந்து கொண்டனர்.

அண்ணா சாலையில் உள்ள பேரறிஞர் அண்ணா சிலையிலிருந்து மவுன ஊர்வலம் நிதியமைச்சர் நாவலர் தலைமையில் புறப்பட்டது.

தலைமைக் கழகத்தின் சார்பில்10 அடிஉயரமுள்ள மலர்வளையம் முகப்பில் எடுத்துச் செல்லப்பட்டது.

திருவல்லிக்கேணி ஜெ. பாலன் கழக கொடியை ஊர்வலத்தின் முன்னே பிடித்துச் சென்றார்.

சீருடை அணிந்த கழக மகளிர் அணியினர் அணிவகுத்துச் சென்றனர்.

அதையடுத்து நிதியமைச்சர் டாக்டர் நாவலர், கழக பொதுச்செயலாளர் இராகவானந்தம் ஆகியோர் தலைமையில் ஊர்வலம் சென்றது.

அமைச்சர்கள், கழக செயலாளர்கள் வாரியத் தலைவர்கள் நாடாளுமன்ற சட்டமன்ற பேரவை மேலவை உறுப்பினர்கள் மற்றும் ஆயிரக்கணக்கான கழகத்தோழர்கள் அணி அணியாக அண்ணன் துயிலுமிடம் நோக்கி அமைதியாக அணிவகுத்து சென்றனர்.

#### அண்ணா பேச்சு

காலை 9 மணிக்கு அண்ணா நினைவிடத்திற்கு ஊர்வலம் வந்து சேர்ந்தது. அண்ணா நினைவிடத்தில் அண்ணாவின் பேச்சுக்கள் காலையிலிருந்து முழங்கிய வண்ணமிருந்தது.

#### மலர் வலையம்

அண்ணா நினைவிடத்தின் மீது நாவலர் மற்றும் அமைச்சர் பெருமக்கள் மலர் வளையத்தை வைத்து வணங்கினர்.

அமைச்சர்களும் வாரியத் தலைவர்களும் தனித்தனியாக மலர்வளையம்வைத்து வணங்கினர்.

பிறகு அண்ணா நினைவிட முகப்பில் அமைக்கப்பட்டிருந்த மேடையில் நாவலரும் ராகவானந்தமும் இருந்தனர்.

#### உறுதிமொழி

பொதுச் செயலாளர் இராகவானந்தம் உறுதிமொழியை நாவலர் படிப்பார். அனைவரும் உறுதி ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றார்.

அதன்பிறகு நாவலர் உரையாற்றினார். பின்னர்

(2-ம் பக்கம் பார்க்க)

---

### அனைவரும் தங்கக் கட்டிகள்...

**தேர்தலில்நிற்கிறேன் என்று முன்வரும் நமது தோழர்கள் ஒருவருக்கொருவர் இளைத்தவர்கள் அல்ல.**

யாரையும் தரம்பிரித்துப் பார்க்கமுடியாத நிலையில் அனைவரும் மாற்றுக்குறையாத தங்கக் கட்டிகளாகத் தான் இருக்கிறார்கள்.

**எனக்குள்ள சங்கடம் எல்லாம்- எந்தத் தங்கக் கட்டியை எடுத்துக் கொள்வது, எந்த தங்கக்கட்டியை விட்டுவைப்பதுஎன்பதுதான்.**

**அப்படி ஏதாவது ஒரு தங்கக் கட்டி விடப்படுமானால் அது மாற்றுக்குறைந்தது என்று யாரும் நினைக்க வேண்டாம்.**

**வேறு நல்ல நகை செய்வதற்காக அந்தத் தங்கக் கட்டியை பத்திரமாக வைத்திருக்கிறேன் என்று பொருள். புறக்கணித்து விட்டேன் என்பது பொருள் அல்ல.**

**-பேரறிஞர் அண்ணா**

---

### பேரறிஞர் அண்ணா அவர்களின் நினைவுநாளான இன்று எடுத்துக்கொண்ட

## உறுதி மொழி

- ★ நெஞ்சில் நிறைந்து நிற்கும் பேரறிஞர் அண்ணா அவர்களுக்கு நினைவு அஞ்சலி செலுத்தும் இன்று கீழ்க்காணும் உறுதிமொழிகளை எடுக்கிறேன்.
- ★ பேரறிஞர் அண்ணா வகுத்துத்தந்த கொள்கை நெறியின்படி நடப்பேன்!
- ★ அவர் அறிவுறுத்திய கருத்துக்களைக் கடைப்பிடிப்பேன்!
- ★ அவர் கற்றுத்தந்த கடமை-கண்ணியம்-கட்டுப்பாட்டினைக் காப்பாற்றுவேன்!
- ★ சமுதாயத்தில் சமநிலை ஏற்படப் பாடுபடுவேன்!
- ★ பொருளாதாரத்தில் சமதர்மம் அமைய உழைப்பேன்!
- ★ அரசியலில் மக்களாட்சி முறை நிலைக்க - நீடிக்கச் செயலாற்றுவேன்!
- ★ இலங்கைவாழ் தமிழ் மக்களின் மனித உரிமைகளைப் பாதுகாக்கப் பாடுபடுவேன்!
- ★ திராவிடப் பண்பாட்டை- நாகரிகத்தைப் பேணுவேன்!
- ★ தமிழ்மொழியை என்றும்-எங்கும்-எதிலும்-ஏற்பேன்-காப்பேன்!
- ★ இந்தி மொழியோ அல்லது வேறு எந்த மொழியோ தமிழ்மொழி மீது ஆதிக்கம் செலுத்த அனுமதிக்கமாட்டேன்!
- ★ மாநிலங்கள் அதிக அதிகாரம் பெறச் செயலாற்றுவேன்!
- ★ சாதி-சமய வேறுபாட்டைக் களைவேன்!
- ★ தீண்டாமையை அடியோடு அகற்றுவேன்!
- ★ பெண்ணடிமைக் கொடுமையைப் போக்குவேன்!
- ★ மதுவின் கொடுமையினை விளக்கி சமுதாயத்தைக் காக்க அயராது உழைப்பேன்!
- ★ ஏழை விவசாயிகளுக்கு கொடுத்த உறுதிமொழியைக் காப்பேன்!
- ★ ஏனைய உழைக்கும் வர்க்கத்துக்கும் நான்கொடுத்த உறுதியை நிறைவேற்ற உழைப்பேன்!
- ★ நீதி-நேர்மை - நாணயம் - ஒழுக்கம் இவைகளைப் போற்றிக் காப்பேன்!
- ★ பேரறிஞர் அண்ணாவின் புகழை என்றும் எங்கும் பரப்புவேன்!

தமிழோடு கலந்திட்ட பேரறிஞர் அண்ணா அவர்கள் பெயர் வாழ்க! அவர் புகழ் ஓங்குக!

---

### கழக அணிக்கு ஆதரவு தாருங்கள்

**கொள்கையற்ற கூட்டுச் சேர்ந்திருக்கும் அவர்களுக்கு மக்கள் நல்ல பாடம் கற்பிக்க வேண்டும்.**

**அவர்கள் (தி.மு.க.) கூட்டணி ஜெயித்தால் குழப்பம்தான் மிஞ்சும், எந்த கொள்கையைக்கடை பிடிப்பது என்பதில் மோதல் வரும்.**

**எனவே நேர்மையான-நிலையான நல்லாட்சி அமைய கழகத்துக்கும் கழக அணிக்கும் ஆதரவு அளியுங்கள்.**

**-புரட்சித்தலைவர்**

### உழைப்பு

உழைப்புஇருவகைப் படும். ஒன்று மூளை உழைப்பு, மற்றது உடலுழைப்பு. உடலுழைப்போடு கூடிய காரியம் உடல் நலத்துக்கும் உதவும்.

—பேரறிஞர் அண்ணா

### பொருத்தம்

செயல்கள் பலவும் ஒன்றையொன்று ஒட்டியே உள்ளன வாயினும், இவற்றிற்கான பொருத்தம் கண்டு தெளிதல்வேண்டும்.

—தந்தை பெரியார்

# அண்ணா நினைவுநாள்

(முதல் பக்கத் தொடர்ச்சி...)

உறுதிமொழியை வாக்கியம் வாக்கியமாக படித்தார். கூடியிருந்த பல்லாயிரக்கணக்கான மக்களும் அந்த உறுதிமொழியை ஏற்கும் வகையில் ஒரே குரலில் திருப்பிச் சொன்னார்கள்.

ஊர்வலத்தில் அமைச்சர்கள் நாவலர், பண்ருட்டி ராமச்சந்திரன், கே.ஏ.கே., ஆர்.எம்.வீ, ராசாராம், ப. உ. ச. அரங்கநாயகம். பொன்னையன். அண்டே. திருநாவுக்கரசு, வி. வி. சாமிநாதன், ஆர். சவுந்தரராசன், நல்லுசாமி ஆனூர் ஜெதீசன் அருணாசலம், கோவேந்தன், விஜயலட்சுமி பழனிசாமி. யூசுப், ஆகியோர் கலந்து கொண்டனர்,

கழக பொதுச் செயலாளர் ராகவானந்தம், துணை பொதுச் செயலாளர் எஸ். ஆர். ராதா, பொருளாளர் மாதவன், அமைப்புச் செயலாளர் சத்தியவாணிமுத்து, தலைமைக்கழகம் துரையரசன், சென்னை மாவட்டச் செயலாளர் ஜேப்பியார் எம்.எல்.சி சென்னை மாவட்ட எம்.ஜி.ஆர். மன்ற செயலாளர் இ. மதுசூதனன் எம்.எல்.சி. சத்யா ஸ்டுடியோ பத்மநாபன், வாரியத்தலைவர்கள் சுலோசனா சம்பத் கோடம்பாக்கம் குமார் கல்யாணி ராமசாமி அன்கா புத்தூர் ராமலிங்கம் எம் எல்.சி. திட்டக்குழுதுணைத் தலைவர் பாவலர் முத்துசாமி சிறுசேமிப்பு துணைத் தலைவர் மன்னை அம்பிகாபதி: நாடாளுமன்ற துணைசபாநாயகர் தம்பிதுரை. கழக எம் பி.க்கள் மோகனரங்கம், வலம்புரிஜான். ஆலடி அருணா, அண்ணாநம்பி, திண்டுக்கல் நடராசன் கழக எம். எல். ஏக்கள் சைதை துரைசாமி, வளர், மதி. மயிலை தமிழ்மணி, முனிரத்தினம், பட்டாபிராமன், மன்னை ஞானசுந்தரம், முசிறி ரத்தினவேலு, சீர்காழி பாலசுப்பிரமணியன், ஏ. வ. வேலு கழக எம். எல். ஏக்கள் ஆர். டி. சீத்தாபதி. கோலப்பா, மாசிலாமணி ஆகியோர் வந்திருந்தனர். டி.கே.கபாலி, ராஜ்குமார், மு. வேதாசலம்சேப்பாக்கம் அன்புதம்பி, மயிலை எம். கே.பாலன், மந்தைவெளி நடராசன், ஐசரிவேலன், கோவைத்தம்பி தி. நகர் மூர்த்தி, திருவை அண்ணாமலை, ஆலந்தூர் பாலன், பம்மல் நல்லதம்பி ஏ. பி.வரதராசன். குசேலர் சி.வி. ஆடலழகன், டி.வி. நாராயணசாமி, தூயமணி மு சக்தி, பெரியகுளம் மேத்தா, துறைமுகம் காஜா, தாம்பரம் லட்சுமிமுத்து, சகுந்தலா, லட்சுமி, வண்ணை அனுராதா. ராதாபாய்,ராஜேஸ்வரி, கோலப்பன் மற்றும் பலர் கலந்துகொண்டனர்.

### மதுரை

மதுரையில். கழகத் தோழர்கள் இன்று அமைதி ஊர்வலம் நடத்தி பேறறிஞர் அண்ணாவுக்குஅஞ்சலி செலுத்தினர்.

காலை 9 மணியளவில் கட்டபொம்மன் சிலையில் இருந்து அமைதி ஊர்வலம் புறப்பட்டது.

ஊர்வலத்தில் அமைச்சர் காளிமுத்து மதுரை எஸ். பாண்டியன், கழக எம் எல் ஏக்கள், சிவகுமார், பாலுசாமி, அன்பழகன், முன்னாள் எம் எல் ஏக்கள் பாலகுருவா கே. எஸ். மணியம் லட்சுமி நாராயணன், மதுரைபால் வளஒன்றியத் தலைவர் நவநீதகிருஷ்ணன் எஸ். கே. டி. ஜக்கையன் பாலகிருஷ்ணன் ராமலிங்கம் சண்முகம் சேக்பரித் ராகவன் அன்னம்மாள் வேலம்மாள் பிரமிளா காந்தி தமிழ்மணி, லோகநாதன் காமராசன் ஆகியோர் உட்பட ஏராளமான கழகத் தோழர்கள் பங்கேற்றனர்.

ஊர்வலம் மேலமாசிவீதி, வடக்குமாசி வீதி வழியாக யானைக்கல்லில் உள்ள அண்ணா சிலையை சென்றடைந்தது.

அங்கு அண்ணாசிலைக்கு மாலையணிவித்து அஞ்சலி செலுத்தினர்.

அண்ணா நினைவிடத்தில் நடந்த உறுதிமொழி ஏற்பு நிகழ்ச்சியில் இரு கன்னியாஸ்திரிகளும் பங்கேற்றனர்.

## போப் தலாய்லாமா சந்திப்பு

புதுடெல்லி, பிப் 3—டெல்லியிலுள்ள வாடிகன் தூதரகத்தில் போப் ஆண்டவரும் தலாய்லாமாவும் சந்தித்துப் பேசினர். போப் ஆண்டவரை தலாய்லாமா இதுவரை 3 தடவை சந்தித்துப் பேசிஇருக்கிறார்

## போப் வருகை: இரவு முழுதும் பஸ் வசதி

சென்னை, பிப், 3—போப் சென்னை வருவதை யொட்டி நாளை(4ந்தேதி) இரவு முழுவதும் பல்லவன் போக்குவரத்துக் கழகம் பஸ் வசதி செய்துள்ளது.

எழும்பூர். அடையாறு, பாரீஸ் சாந்தி தியேட்டர் ஆகிய இடங்களிலிருந்து கடற்கரையிலுள்ள காந்தி சிலைக்கு செல்லும் வகையில் பஸ் வசதி செய்யப்பட்டுள்ளது என பல்லவன் மக்கள் தொடர்பு அதிகாரி பி. வரதராசன் தெரிவித்துள்ளார்.

ராஞ்சி. பிப். 3—டெல்லியிலிருந்து புறப்பட்டு ராஞ்சி வந்த போப்பை பீகார் முதல்வர் வரவேற்றார். ஏராளமான பொதுமக்களும் போப்புக்கு உற்சாக வரவேற்பு தந்தனர்.

### ராஞ்சியில் போப்புக்கு உற்சாக வரவேற்பு

ராஞ்சியில் சுமார் 3 மணி நேரம் பல்வேறு நிகழ்ச்சிகளில் பங்கேற்ற போப் பின்னர் கல்கத்தா புறப்பட்டுச்சென்றார். ராஞ்சி செல்லு முன் போப்பை ஜனாதிபதி ஜைல்சிங், பிரதமர் ராஜீவ் மற்றும் மதத்தலைவர்கள் டெல்லி விமான நிலையத்தில் வழி அனுப்பிவைத்தனர்.

Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, MADRAS 600 029.

# உள்ளாட்சித் தேர்தல்: இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் பட்டியல்

சென்னை, பிப். 3—தமிழ் நாட்டில் நடைபெற இருக்கும் நகராட்சி ஊராட்சி, ஒன்றியங்கள் தேர்தல்களில் இந்திரா காங்கிரஸ்சார்பில் போட்டியிடும் வேட்பாளர்களின் பட்டியலை தமிழ் நாடு இந்திரா காங்கிரஸ் தலைவர் பழனியாண்டி நேற்று வெளியிட்டார்.

கீழ்க்கண்ட நகராட்சி தலைவர் பதவிகளுக்கு காங்கிரஸ்சார்பில் போட்டியிடும் வேட்பாளர்களின் பெயர்கள் வருமாறு:-

### வட செங்கற்பட்டு

திருவொற்றியூர் டபிள்யூ ஆர்.பூபதி பல்லாவரம் டி. துரைவேலு.

### தென் செங்கற்பட்டு

காஞ்சிபுரம்- எம்.ஜெயராம்பிள்ளை

### வேலூர்

அரக்கோணம்- சுவாமிநாதமுதலியார், ராணிப்பேட்டை - கேப்டன் ஆனந்தன், ஆற்காடு- ஏ.கே.நடராஜன்.

### திருவண்ணாமலை

திருவண்ணாமலை- அருள்மொழி

### தென் ஆற்காடு

சிதம்பரம் - சந்திரபாண்டியன், நெல்லிக்குப்பம்-ஆதிநாராயணா, விழுப்புரம்-ஆர். எஸ். மணி

### தர்மபுரி

தர்மபுரி- டி. என். வடிவேலு.

### சேலம்

ஆத்தூர்-டாக்டர்அமிர்தசாமி,இடப்பாடிமாரிமுத்து நாமக்கல் ஏ. பாலசுப்பிரமணியம்.

### பெரியார்

ஈரோடு-ஆர். பாலசுப்பிரமணியம் தாராபுரம்- வெங்கட்ராம செட்டியார் கோபி- எம். எஸ். விஸ்வநாதன்

### கோவை

மேட்டுப்பாளையம்- சுதிரேசன் பொள்ளாச்சி- பி. கே. ஜெகதீஸ்வரன்

### திருச்சி

திருச்சி- எல். ஞானராஜ், கரூர்- எம் பழனிவேலு

### தஞ்சை

கும்பகோணம்- எஸ்.ஆர். ஜி.ரங்கநாதன், மன்னார்குடி. சிவா. ராஜமாணிக்கம் திருவாரூர் எம். சாம்பசிவம்.

### புதுக்கோட்டை

அறந்தாங்கி டி. அப்துல்லா

### பசும்பொன்

தேவகோட்டை - சேது லட்சுமணன்.

### இராமநாதபுரம்

பரமக்குடி - சங்காச்சாரி

### மதுரை

தேனி அல்லி நகரம் எம். ஆர். அழகர்ராஜா- திருமங்கலம்- என். எஸ். சீனிவாசன். திண்டுக்கல்- சி. கே, எம், துல்கர்னி.

### காமராசர்

சிவகாசி - டி. ஜி. தர்மர், விருதுநகர் - எம். சொக்கர்

### நெல்லை

மேலப்பாளையம் எம்.எ எஸ். அபுபக்கர் தென்காசி டி.சி.எம்.ராமசாமி செங்கோட்டை முத்துசாமி கரையாளர்.

### கன்னியாகுமரி

பத்மநாபபுரம்-கொச்சுக் கிருஷ்ணப்பிள்ளை.

### ஊராட்சி ஒன்றியங்கள்

கீழ்க்கண்ட ஊராட்சி ஒன்றியங்களில் இந்திரா காங்கிரஸ் சார்பில்போட்டியிடுகிற வேட்பாளர்களின்பட்டியல் வருமாறு:-

### வடசெங்கற்பட்டு

ஆர். கே. பட்டு - வி. ஏ. சங்கரன், திருவள்ளூர்- கோவிந்தராஜுலு, சோழவரம் - எஸ். ஆர் வரதராஜுலு. திருவேலங்காடு- எம். ஆர். ரகுபதி, மாதவரம், புழல்-ஆர். என். நாராயணசாமி

### தென் செங்கல்பட்டு

அச்சிறுப்பாக்கம் - எஸ் ஆர். ஜெயராமன் லத்தூர்- வீரராகவரெட்டியார். குன்றத்தூர்சக்கரபாணிரெட்டியார் உத்திரமேரூர்-சிராமசாமி (தெற்கு செங்கற்பட்டுமாவட்ட காங்கிரஸ் தலைவர்) பூந்தமல்லி— பி.ஆர் குருதாஸ்.

### வேலூர் ஒன்றியங்கள்

சோளிங்கர்- ஏ. எம். பொன்னுரங்கம்,காட்பாடி சி.கே. கேசவன். வேலூர் வி.ஆர். லட்சுமண முதலியார்.கணியம்பாடி வி.கே. சம்பந்தம் குடியாத்தம்- கே.கே.வேலாயுதம். பேரணாம்பட்டு- ஆர்.வி. பாபுகந்திலிஜெயபால்எம் ஆர். ஜோலார்பேட்டை- வி கே.கமலக்கண்ணன்

### திருவண்ணாமலை

மேற்குஆரணி-வி. விநாயகம், வந்தவாசி- பி.செல்வராஜ், தண்டராம்பட்டு வி. ராமசாமி, கலசபாக்கம்-ஜி,ராஜ்குமார் சேத்துப்பட்டு நடராஜன்

### தென்னாற்காடு ஒன்றியங்கள்

வல்லம்- நாராயணமூர்த்தி,மரக்காணம்- கே. சம்பத் குமார், திருக்கோவிலூர்- வடிவேலு, காணை- செல்லாராம், குறிஞ்சிப்பாடி- நடேசன் கண்டமங்கலம்- வெங்கடேசன் கீரப்பாளையம்- அழகிரி, மேல் புவனகிரி- பழனிச்சாமி, குமராட்சி- கே. காந்தி, சங்கராபுரம்- கே. சீனிவாசன்.

தியாகதுர்க்கம்- நாராயணசாமி உடையார், கம்மாவரம்- தெய்வகனகராஜ், நல்லூர்- தியாகராஜன்.

### தருமபுரி

ஒசூர்- என். ராமச்சந்திர ரெட்டி [முன்னாள் எம் எல். ஏ.,] தளி- அனுமந்தன் ரெட்டி, சூலகிரி-ஏ. வி. முனிச்சந்திரப்பா, வேப்பனஹள்ளி- பி. எம் முனுசாமி கவுண்டர். காரிமங்கலம்- சுப்பிரமணியம்என்கிறசென்னப்ப கவுண்டர், மொரப்பூர்- ஜே. சொங்கலிங்கம் கவுண்டர். ஊத்தங்கரை- ஆர் பாலசுப்பிரமணியம்.

### சேலம்

மேச்சேரி- ஆர். பழனிச்சாமி. நங்கவல்லி எம்.எம். மணி ஆத்தூர் ஏ.வி.வெங்கடாசலம் தலைவாசல் டாக்டர்சண்முகம்எருமைப்பட்டி- எஸ். என். பெரியசாமி, பரமத்தி- பி.பாலசுப் பிரமணியம், நாமகிரிப்பேட்டை கே. புள்ளியப்பன், இடப்பாடி பி. கோபால்,சங்ககிரி எம்.கே. பழனியப்பன்.

காடையாம்பட்டி,வாழப்பாடி,சேந்தமங்கலம் திருச்செங்கோடு ஆகிய இடங்களுக்கு இதுவரை முடிவாக வில்லை.

### பெரியார் ஒன்றியங்கள்

சென்னிமலை- கே.சின்னசாமி கவுண்டர். மூலனூர்- கே.எஸ்.பெரியசாமி, அந்தியூர்எம்.குருசாமிகவுண்டர், டி,என்.பாளையம்-கே.எம். பாலசுப்பிரமணியம், தாளவாடி-ஆர். சுப்பிரமணியம், பெருந்துறை - எஸ். எம் ஆண்டமுத்து, மொடக்குறிச்சி முடிவாகவில்லை

### கோவை ஒன்றியங்கள்

பொள்ளாச்சி வடக்கு- எஸ். டி. துரைசாமி, மடத்துக்குளம்-முடிவாகவில்லை உடுமலைப்பேட்டை - பி. எல். சிவானந்தம், அவிநாசி, பி. விஜயன், காரமடை எஸ். ஜெயப்பிரகாஷ்தொண்டாமுகதூர்-எம். என். கந்தசாமி பொங்கலூர்-பி. ராமலிங்கம். திருப்பூர். ஆர். கிருஷ்ணன்.

### நீலகிரி ஒன்றியங்கள்

ஊட்டி - எம். சந்திரன் பி.ஏ.பி.எல். கூடலூர் எம். கே. கரீம். கோத்தகிரி ஜே. உச்சிகவுடர்,

### திருச்சி ஒன்றியங்கள்

வேப்பந்தட்டை- ஆர். ராமலிங்கம் பி.ஏ ,வேப்பூர் ஏ.பெருமாள், ஆண்டிமடம் எம் எஸ். தங்கராசுபடையாச்சி, திருமானூர். எம் கருப்பையன், லால்குடி- எஸ்.செல்லப்பன், முசிறி- எஸ்.பி.ரங்காராஜு உப்பிலியாபுரம்- எஸ். தேவராஜ், திருவெறும்பூர்- வி.சுவாமிநாதன். வையம்பட்டி- வி கோபாலசாமி,தாந்தோணி சிவசாமி. கடவூர்- கே. கே. முத்தையா, தோகைமலை-செல்வராஜு

### தஞ்சை ஒன்றியங்கள்

சீர்காழி-ஜிசபாபதி,ன் மயிலாடுதுறை-ஜி. ஞான சேகரன், குடவாசல்-அசோகன். பாபநாசம்-என். கருப்பண்ண உடையார் திருவையாறு-பி. பாண்டுரங்கம். திருவோணம்- டி. எஸ். ராஜேந்திரன், சேதுபாவாசத்திரம்- ஏ. பழனிவேல், நீடாமங்கலம்கேநல்லதம்பி அம்மாபேட்டை- ரகுநாத வன்னியர், திருவிடைமருதூர்-ராஜாபாதர், முத்துப்பேட்டை - சாமித்துரை, திருமருகல்- காசிராமதாஸ் பட்டுக்கோட்டை முடிவாக வில்லை.

### புதுக்கோட்டை ஒன்றியங்கள்

மணமேல்குடி- வைத்தியலிங்கம், கரம்பக்குடி- சி. சுவாமிநாதன், புதுக்கோட்டை-ஜே. ரங்கராஜ். குன்னாண்டார் கோவில்- முடிவாகவில்லை, பொன்னமராவதி- நல்லபெருமாள் கலியராயர்.

### பசும்பொன்

சிங்கம்புணரி- அருணகிரி கல்லல் - வெற்றியூர் கருப்பையா, சிவகங்கை- சுதர்சன நாச்சியப்பன் மானாமதுரை-சுதந்திர பாண்டியன் இளையாங்குடி - எஸ். பழனிச்சாமி,

### இராமநாதபுரம் ஒன்றியங்கள்

கமுதி- பி,கே. கிருஷ்ணன் முதுகுளத்தூர்-கே. ஓ, ராமசாமி. பரமக்குடி - எம்.கிருஷ்ணன்இராமநாதபுரம்முடிவாகவில்லை.

### மதுரை ஒன்றியங்கள்

மதுரை மேற்குசோணை முத்து சேர்வை. அலங்காநல்லூர்- ஆர் எஸ். சுந்தரராஜன் சேர்வை, திருமங்கலம்- எஸ் வேலுச்சாமித்தேவர். பெரியகுளம். ரெங்கசாமி, சின்ன மனூர்- எல் வேலுச்சாமி,சாணார்பட்டி -ஏ. நடராஜன் நிலக்கோட்டை- பி. வி. முருகையா.

ஒட்டன் சத்திரம் முடிவாகவில்லை. பழனி-ஆர். லட்சுமணசாமி குஜிலியம்பாறை-பி ஜெயராமன், மேலூர்- இரா. பொன் குளியாண்டி, டி. கல்லுப்பட்டி-திருப்பதி நாடார், கம்பம் ஜி. பி வி. ராஜு,

### காமராசர் ஒன்றியங்கள்

நரிக்குடி-பி. எம். பாஸ்கரன், காரியாப்பட்டி-ஆர். சந்திரன்வெம்பக்கோட்டை ஸ்ரீநிவாசன், ஸ்ரீவில்லிப்புத்தூர்- புலவர் ராமசாமி.

### திருநெல்வேலி ஒன்றியங்கள்

திருச்செந்தூர் — சுப்ரமணிய ஆதித்தன்,ஆழ்வார் திருநகரி-கே.டி.கே.சுபபஷ் களக்காடு — தவசிக்கனி பாளையங்கோட்டை- எஸ். ஷண்முகவேல்குருவிக்குளம் ஆர். எஸ். மோகன்தாஸ், வாசுதேவ நல்லூர்- வெள்ளைச்சாமித்தேவர், கடையநல்லூர் - அய்யாத்துரை, கீழப்பாவூர்-கே. பத்மநாபன், தூத்துக்குடி- ஆதிலிங்கம்.

மானூர் - டாக்டர் மோகன்தாஸ், கடையம்- ரவி சி.அருண், மேலநீலத்தநல்லூர். முடிவாகவில்லை.

### கன்னியாகுமரி ஒன்றியங்கள்

குருந்தங்கோடு-ஏ. பாலையா. ராஜாக்கமங்கலம், வி. செல்வசுதந்திரம்முந் சிறை-ஜனகராஜ்.

### சேலம் மாவட்டம்

சேலம் யூனியன் மாரியப்பன் பி.இ. வாலப்பாடி நடேசன் ஓமலூர்—பழனிவேல் சேந்தமங்கலம்- பெருமாள் கவுண்டர்

### தஞ்சை

பட்டுக்கோட்டை- நம்பிவயல் நாகராசன்

### திருச்சி

குளித்தலை- ராமசாமி ரெட்டியார்

### மதுரைமாவட்டம்

ஒட்டன்சத்திரம் எம். தண்டபாணி

## புதுக்கோட்டை மாவட்டத்தில் 1,385 ஓட்டுச்சாவடி

புதுக்கோட்டை,பிப் 3-புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள ஊராட்சி ஒன்றியங்கள், பேரூராட்சிகள்,கிராம ஊராட்சிகள் ஆகியவற்றில் ஆயிரத்து 385 வாக்குச்சாவடிகள் அமைக்கப்படவுள்ளன. 8 லட்சத்து5ஆயிரத்து 168 வாக்காளர்கள் உள்ளனர்

புதுக்கோட்டை மாவட்டத்தில் நகராட்சி. ஊராட்சி ஒன்றியங்கள் பேரூராட்சிகள் ஆகியவற்றைபற்றிய விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள மொத்த ஊராட்சி ஒன்றியங்களின் எண்ணிக்கை 13. மொத்த பேரூராட்சிகளின் எண்ணிக்கை 8. கிராம ஊராட்சிகள் எண்ணிக்கை 498. கிராம ஊராட்சியில் உள்ள வார்டுகளின் எண்ணிக்கை 2 ஆயிரத்து 170. பேரூராட்சிகளின் வார்டுகளின் எண்ணிக்கை 104.கிராமஊராட்சி மூலம் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கை 5 ஆயிரத்து 306.

இதில் ஆதி திராவிடர் உறுப்பினர் 424. பெண் உறுப்பினர்கள் 498 பேர் பேரூராட்சி மூலம் தேர்ந்தெடுக்கப்படவுள்ள உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கை 104.

இதில் ஆதிதிராவிடர்—2 பெண்கள்—8,

புதுக்கோட்டை மாவட்டத்தில் அமைக்கப்படவுள்ள வாக்குச் சாவடிகளின் எண்ணிக்கை ஆயிரத்து 385 வாக்குப்பதிவு நடைபெறும் இடங்கள் 798, இரட்டை. வார்டுகளைக் கொண்ட வாக்குச்சாவடிகள் 909.

தற்காலிக கொட்டகைகளில் அமைக்கப்படவுள்ள வாக்குச் சாவடிகள்25 வாக்குச் சீட்டு எண்ணும் இடங்கள் 25. இந்த மாவட்டத்தில் 2 நகராட்சி உள்ளன. புதுகோட்டை நகராட்சிகள் யில் உள்ள மொத்த வாக்காளர்கள் 52ஆயிரத்து706

இதில் ஆண் வாக்காளர்கள் 27 ஆயிரத்து 293. பெண் வாக்காளர்கள் 25 ஆயிரத்து 413. இதில் உள்ள வார்டுகளின் எண்ணிக்கை 32 வாக்குச் சாவடிகளின் எண்ணிக்கை 67.

அறந்தாங்கிநகராட்சியில் மொத்த வாக்காளர்கள் 15 ஆயிரத்து 430. ஆண் வாக்காளர்கள் 8 ஆயிரத்து 249.பெண் வாக்காளர்கள் 7 ஆயிரத்து181 வார்டுகள் எண்ணிக்கை 20. வாக்குச்சாவடிகளின் எண்ணிக்கை 20.

புதுக்கோட்டை மாவட்டத்தில் 13ஊராட்சி ஒன்றியங்கள் உள்ளன. இவற்றில் உள்ள மொத்த வாக்காளர்களின் எண்ணிக்கை 6 லட்சத்து 93 ஆயிரத்து 251 இதில் ஆண் வாக்காளர்களின் எண்ணிக்கை 3 லட்சத்து 42 ஆயிரத்து 486. பெண் வாக்காளர்களின் எண்ணிக்கை 3 லட்சத்து 50 ஆயிரத்து 765.

ஆண்களை விட பெண் வாக்காளர்கள் 8 ஆயிரத்து 279 பேர் அதிகம்உள்ளனர்

இந்த மாவட்டத்தில் உள்ள பேரூராட்சிகளின் எண்ணிக்கை8. இவற்றின் மொத்த வாக்காளர்கள் எண்ணிக்கை 43 ஆயிரத்து 781. அதில் ஆண் வாக்காளர்களின் எண்ணிக்கை 22ஆயிரத்து 456. பெண் வாக்காளர்களின் எண்ணிக்கை 21ஆயிரத்து 235.

## கிரிக்கெட்: இந்தியாவெற்றி

மெல்போர்ன், பிப். 3—ஆஸ்திரேலியாவில் இந்திய அணிக்கும், நியூசிலாந்து அணிக்கும்இடையேநேன்று நடைபெற்ற ஒரு நாள் கிரிக்கெட் போட்டியில் இந்தியா வெற்றி பெற்றது.

நியூசிலாந்தைவிட 21ரன்கள் வித்தியாசத்தில் இந்திய அணியினர் வெற்றி பெற்றனர். அடுத்தபடி ஆஸ்திரேலியாவுடன் இறுதிஆட்டத்தில் இந்திய அணியினர் மோதுகிறார்கள்.

# புரட்சிதலைவருடன் பண்டாரி சந்திப்பு

## ஈழத்தமிழர் பிரச்சினை பற்றி ஆலோசனை

**சென்னை, பிப். 3- இந்திய வெளிநாட்டு இலாகா செயலாளர் ரமேஷ் பண்டாரி சென்னையில் முதல்வர் புரட்சித்தலைவரை சந்தித்தார். ஈழத் தமிழர் பிரச்சினை பற்றி ஆலோசனை நடத்தினார்.**

பிரதமர் ராஜீவ்காந்தியின் தூதரான பண்டாரி நேற்று சென்னைவந்திருந்தார்.

சென்னையில் முதல்வர் புரட்சிதலைவரை சந்தித்து பேசினார். இலங்கை தமிழர் பிரச்சினைகுறித்து முக்கிய ஆலோசனை நடத்தினார். சுமார் 30 நிமிடம் பேசிக்கொண்டிருந்தனர்.

இந்தப் பேச்சுவார்த்தையின் போது அமைச்சர்கள் பண்ருட்டி ராமச்சந்திரன், பொன்னையன் ஆகியோர் உடனிருந்தனர்.

சமீபத்தில் இலங்கையில் உள்ள தமிழர்களுக்கு (தோட்ட தொழிலாளர்கள்) பிரஜா உரிமை வழங்குவது என்று இலங்கை அரசுக்கும் மத்திய அரசுக்கும் ஒப்பந்தம் ஏற்பட்டது. இந்த ஒப்பந்தத்தை வரவேற்றமுதல்வர் புரட்சித்தலைவர் இதன் மூலம் நல்ல நம்பிக்கை ஏற்பட்டுள்ளது என்றும் பண்டாரியிடம்தெரிவித்தார்.

முன்னதாக, பண்டாரி விடுதலைப்புலிகளை சந்தித்து பேசினார் சென்னை கிண்டியில் உள்ள ஆளுநர் மாளிகையில் இந்த சந்திப்பு நடந்தது. அப்போது அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் உடனிருந்தார்.

விடுதலைப்புலி இயக்கத் தலைவர்கள் பாலகுமாரன் ரத்தினசபாபதி (ஈழப் புரட்சி அமைப்பு) திலகர் (தமிழ்ஈழ விடுதலைப்புலிகள்), மதிசெல்வம் (தமிழ்ஈழ விடுதலை இயக்கம்), கேதீஷ்வரன் (ஈழ மக்கள் புரட்சிகா விடுதலை முன்னணி) ஆகியோர் இந்தச் சந்திப்பில் கலந்து கொண்டனர். அவர்கள் பண்டாரியிடம், இலங்கையில் உள்ள நிலவரம் குறித்து எடுத்துச் சொன்னார்கள். இந்தப்பிரச்சினை குறித்து அவர்கள் ஒன்றரை மணி நேரம் பேசிக் கொண்டிருந்தனர்.

இது குறித்து விடுதலைப் புலி இயக்கத்தலைவர் ஒருவர் நிருபர்களிடம் கூறியதாவது:—

இலங்கையில் தமிழர்கள் தொடர்ந்து ராணுவத்தினரால் படுகொலை செய்யப்படுகிறார்கள். அதிபர் ஜெயவர்த்தனே ராணுவ ரீதியில் தான் இந்த பிரச்சினைக்கு தீர்வுகாண விரும்புகிறார் என்று அவரிடம் எடுத்துச் சொன்னோம். தோட்டத் தொழிலாளர்கள் வசிக்கும் பகுதியில் இப்போது இனக் கலவரத்தை தூண்டி விடுகிறார்கள் என்றும் அவரிடம் கூறினோம்.

### பண்ருட்டியாருடன் சந்திப்பு

ராணுவ முகாம்களை சுற்றி ஒரு மைல் தூரத்திற்கு பாதுகாப்பு மண்டலமாக இலங்கை அரசு அறிவித்துள்ளது. அப்பாவித் தமிழர்களை பழி வாங்குவதற்காகத் தான் இலங்கை அரசு இந்த உத்தரவை பிறப்பித்துள்ளது என்றுஅவரிடம் எடுத்துக் கூறினோம் நாங்கள் கூறிய கருத்துக்களை பண்டாரி அமைதியாகக் கேட்டார்.

இவ்வாறு விடுதலைப் புலி இயக்கத் தலைவர் கூறினார்.

விடுதலைப்புலிகள் சந்திப்புக்கு பிறகு பண்டாரி அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரனை தனியாக சந்தித்து பேசினார். முக்கிய பிரச்சினை குறித்து அவர்கள் பேசினார்கள்.

விடுதலைப்புலி இயக்கத் தலைவர்களுள் ஒருவரான உமாமகேசுவரன் தனியாக பண்டாரியைச் சந்தித்து பேசினார். அப்போது அவர், "இலங்கைத் தமிழர் பிரச்சினைக்கு பேச்சுவார்த்தை மூலம் சமரச தீர்வு காண முடியாது. இலங்கை அரசு அதற்கு நிச்சயம் ஒத்துக் கொள்ளாது. இப்போதுள்ள சூழ்நிலையில் ராணுவம் மூலம்தான்இந்த பிரச்சினைக்கு தீர்வு காண முடியும்'' என்று கூறினார்.

ஆனால் பண்டாரி அவருடைய கருந்தை ஏற்றுக் கொள்ளவில்லை. சமரச முயற்சி தொடரும் என்று அவர் பதில் அளித்தார்,

# இந்து முறைப்படி பூரண கும்பத்துடன் போப்புக்கு வரவேற்பு

சென்னை, பிப். 3— மாவிலைத் தோரணங்கள் கட்டி இந்து முறைப்படி ஆரத்தி எடுத்து பூரண கும்ப மரியாதையுடன் போப்ஆண்டவருக்கு சென்னையில் சிறப்பான வரவேற்பு அளிக்கப்படுகிறது.

வரும் 5-ந் தேதி சென்னைக்கு வருகை தரும் போப் ஆண்டவரின்சுற்றுப் பயண நிகழ்ச்சிகள் குறித்து ஆர்ச்பிஷப் அருளப்பா நிருபர்களிடம் விளக்கி கூறினார்.

அப்போது அவர் கூறியதாவது:

போப் ஆண்டவர் வரும் புதன்கிழமை (5-ந் தேதி) கல்கத்தாவிலிருந்து தனி விமானம் மூலம் காலை 11 மணிக்கு சென்னை மீனம்பாக்கம் விமானநிலையம் வந்து அடைகிறார். அங்கு அவருக்கு கவர்னர் தலைமையில் அரசு மரியாதையுடன் வரவேற்பு அளிக்கப்படுகிறது,

அதன்பின் அவர் அங்கிருந்து 11. 10 மணிக்கு கார்மூலம் புறப்பட்டு பரங்கிமலையில் உள்ள புனிததோமையர் ஆலயத்திற்கு செல்கிறார்.

### வரலாற்று சிறப்பிடம்

400ஆண்டுகால புராதன சிறப்பு மிக்க அந்த கோவிலில் கிறிஸ்துவ நெறிபரப்பி வந்த ஆங்கில பாதிரியாரானதோமையார் சிலுவை முன் மண்டியிட்டு பிரார்த்தனை செய்து கொண்டு இருந்த போது வெட்டி கொல்லப்பட்டதாக வரலாறு உள்ளது. அவர் பிரார்த்தனை செய்த அதே கல் சிலுவையின் முன் போப் ஆண்டவர் முழங்காலிட்டு ஜெபம் செய்கிறார்.

அங்கு 10 வயதுக்கு உட்பட்ட சிறுவர், சிறுமிகள் நடத்தும் இசை நிகழ்ச்சியைக் கேட்டுகளிக்கிறார்.

பரங்கிமலைக்கு வரும் போது அவரை இந்திய சம்பிரதாயப்படி ஆரத்தி எடுத்து பூரணகும்ப மரியாதையுடன் வரவேற்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

பிரார்த்தனைசெய்தபிறகு பரங்கி மலையின் உச்சியில் நின்று கூடி இருக்கும் ஆயிரக்கணக்கான மக்களை ஆசீர்வதிக்கிறார்.

### மாவிலை தோரணம்

பிறகு அங்கிருந்து பகல் 11.40 மணிக்கு காரில் புறப்பட்டு 12.15 மணிக்கு சென்னை அரசினர் தோட்டத்தில் உள்ள ராஜாஜி மண்டபத்தை அடைகிறார்.

போப் ஆண்டவரை வரவேற்பதற்காக அரசினர் தோட்ட நுழைவு வாசலில் இந்திய பண்பாட்டுப்படி மாவிலை தோரணம், தென்னைஓலை தோரணங்களால் அலங்கார வளைவு அமைக்கப்பட்டு இருக்கும்

ராஜாஜி மண்டபத்தின் 29படிகளிலும் பல்வேறு மதத்தை குறிக்கும் உடைகள் அணிந்து குழந்தைகள் நிற்பார்கள்.

போப்ஆண்டவர் பகல் 12-15 மணிக்கு ராஜாஜி மண்டபத்திற்கு வருவார். நாதசுர இசை முழங்க அவருக்கு வரவேற்பு அளிக்கப்படும்.

சேலம் பிஷப் மைக்கேல் பி. துரைசாமி வரவேற்று உள்ளே அழைத்து செல்வார் ரெஜினா வின்சென்ட் மங்கல ஆரத்தி எடுப்பார் ராஜலட்சுமி ஜெயவேலு பூரண கும்ப மரியாதையுடன் வரவேற்பார்.

போப் ஆண்டவர் தனது இரு கரத்தையும் பூரண கும்பத்தின் மீது வைத்து வரவேற்பு மரியாதையை ஏற்றுக்கொள்வார் வரவேற்க வந்து இருக்கும் பல மதத்தலைவர்களையும் சந்திப்பார்.

அதன்பிறகு பிரபல நடனக்கலைஞர் சித்ரா விசுவேசுவரன் ராஜாஜி மண்டபத்தின் முன் பகுதியில் நின்று பரத நாட்டியத்தின் ஒரு பகுதியான அஞ்சலி நடனம் ஆடி வரவேற்பு மரியாதைஅளிப்பார்.

அதன் பிறகு சென்னைப் பல்கலைக்கழக துணை வேந்தர் பி.பி. சுந்தரேசன் போப் ஆண்டவருக்கு மாலை அணிவிப்பார்.

போப் ஆண்டவர் மீது பன்னீர் தெளிக்கப்படும். வரவேற்பாளர்கள்சந்தனக் கிண்ணத்தையும், கற்கண்டு தட்டையும் நீட்டுவார்கள். அவற்றை ஏற்ற பிறகு அவரை ஆர்ச் பிஷப் அருளப்பா உள்ளே அழைத்து செல்வார்.

பாரசீக சமுதாயத்தைச் சேர்ந்த திருமதி மகேர் கே மாஸ்டர் மேடை அருகில் குத்து விளக்கை வைத்து இருப்பார். அதை போப் ஆண்டவர் ஏற்றி வைப்பார். பின்னர் அரியாசனம் போல அமைக்கப்பட்டுள்ள இருக்கையில் அமர்வார்.

இதைத் தொடர்ந்து பக்தர்கள் இந்து மத பஜனை பாடல்களைப் பாடுவார்கள். பின்னர் பிஷப் மைக்கேல் பி. துரைசாமி வரவேற்று பேசுவார்

முஸ்லிம் சமுதாய தலைவர் அப்துல்சமது போப் ஆண்டவருக்குத் பொன்னாடை போர்த்துவார்.

அதன் பிறகு கனது வாழ்த்து செய்தியை தெரிவித்து பேசுவார்.

கேரள மாநிலம் கள்ளிக்கோட்டை முன்னாள் பல்கலைக் கழக துணைவேந்தர் சுகுமார் ஆழிகோட் நன்றி கூறுவார்.

விழா முடிவில் தொழுநோயாளர்களுக்காக பொதுத் தொண்டாற்றி வரும் மாராட்டிய மாநிலத்தைச் சேர்ந்த சமூக சேவகர்பகவந்த்சிங்தல்வாரி விழா நினைவாக போப் ஆண்டவருக்கு அரச மர இலை வடிவத்தில் அமைக்கப்பட்ட "தர்ம சக்கரா'' கேடயத்தை வழங்குவார்.

பின்னர்கூட்டத்தினருக்கு ஆசி கூறிவிட்டு பகல் 1 மணிக்கு அங்கு இருந்து புறப்பட்டு ஆர்ச்பிஷப்பின் வீட்டிற்குசெல்கிறார் 1.15 மணிக்கு அங்கு போய் சேருவார்.

ஆர்ச்பிஷப்பின் வீட்டில் பகல் உணவு அருந்துகிறார். 2மணி நேரம்அங்கு ஓய்வு எடுக்கிறார்.

அதன் பிறகு பிற்பகல் 3-15மணிக்கு சாந்தோம் கதீட்ரல் தேவாலயத்திற்கு செல்கிறார்.

அங்குள்ளபுனித தோமையரின் (செயின்ட்தாமஸ்) கல்லறையில் பிரார்த்தனை நடத்துகிறார்.

பின்னர் அங்கு கூடி நிற்கும் உடல் ஊனமுற்றோர்களையும்- அநாதைகளையும்- குழந்தைகளையும் போப் ஆண்டவர் சந்தித்து ஆசி கூறுகிறார்.

அதன் பிறகு 3-30 மணிக்கு மெரீனா கடற்கரைக்கு புறப்பட்டு3.40க்கு வந்து சேருகிறார்.

போப் ஆண்டவர் சென்னை வருவதையொட்டி அவருச்கு நினைவுப் பரிசாகவும் காணிக்கையாகவும் 5 பொருட்கள் கொடுக்கப்படுகின்றன.

நமது பண்பாட்டை விளக்கும் வகையில்வீணை சந்தன மரத்தால் செதுக்கப் பட்ட சாந்தோம் தேவாலய சிலை. நமது தேசிய பறவையின் நினைவாக மரத்தால் வடிவமைக்கப் பட்டு மயில் தோகையால் செய்த மயில் சிலை. சிலுவையை நண்டு தனது கொடுக்குகளால் விடாமல் பிடித்து வைத்து இருப்பது போன்ற கேடயம், பரங்கிமலையில் புனித தோமையர் வைத்திருந்த சிலுவைப் படத்தின் நகலும், இயேசுவும் அவரது தாயாரும் இருப்பது போன்ற படமும் இணைக்கப்பட்டு அலங்கார அமைப்புடன் கூடிய பெரிய படம் ஆகியவை வழங்க இருக்கிறோம்.

அத்துடன் பெரிய தஞ்சாவூர் தட்டு ஒன்றும் கரும்பு, பழவகைகள், பல வண்ண பூக்கள் ஆகியவையும் அவருக்கு அன்பளிப்பாக வழங்கப்படும்.

போப்ஆண்டவரின் வருகையையொட்டி அவரது வயதைக் குறிக்கும் வகையில் விமான நிலையத்தில் இருந்து மெரீனாவரை 65 இடங்களில் அலங்கார வளைவுகள் அமைக்கப்படுகின்றன.

சைதாப்பேட்டை மறைமலை அடிகள் பாலத்தில் 65 தேசிய கொடிகளும் 65 போப் ஆண்டவர் கொடிகளும் பறக்கவிடப்படும்.

சென்னை மெரீனாவில் போப் ஆண்டவரின் 65அடி உயர கட்அவுட் வைக்கப்படும். கடற்கரையில் சமாதானத்தின் சின்னமாக 65 வெண் புறாக்கள் பறக்க விடப்படும்.

போப் ஆண்டவரின் சுற்றுப்பயணத்திற்காக குண்டு துளைக்காத காருக்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. மெரீனா பொதுக்கூட்டத்திற்கு 2,500 ஆண்களும், 1000 பெண்களும் கொண்ட தொண்டர் படை அமைக்கப்பட்டுள்ளது.

டாக்டர் ரெக்ஸ் தலைமையில் மருத்துவக் குழு அமைக்கப்பட்டுள்ளது 75 டாக்டர்கள், 150 நர்சுகள், 12 ஆம்புலன்ஸ் வண்டிகள், மற்றும் 10 பறக்கும்மருத்துவபடையும் அமைக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு ஆர்ச் பிஷப் அருளப்பா கூறினார்.

# நடிகராகத் திகழ்ந்த புனித போப் ஆண்டவர்

-: டாக்டர் பி. எம். ரெக்ஸ் எம். டி. :-

புனிதபோப் IIவது ஜான் பால் அவர்கள் இன்று சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த தமிழகம் வருவது, தமிழகத்தின் வரலாற்றுக்குத் தனிப் பெருமை சேர்ப்பதாகும்.

போப்ஜான்பால் IIஏதோ கத்தோலிக்கக் கிருத்துவ சமயத்தலைவர் என்ம் பார்வையிலேதான் பலரு இன்று அவரைப்பார்க்கின்றனர்.

அவர் இன்றைய இளைய தலைமுறையினர்க்கு நடைமுறை வாழ்க்கைக்கு வழி காட்டும் ஒரு கலங்கரை விளக்காகத் திகழ்கின்றார். என்றால் அது மிகையாகாது.

''உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ'' என்றார் மனோன்மணியம் பகன்ற சுந்தரனார் அவர்கள்.

போப் IIவது ஜான் பால் ஓர் ஏழைக் குடியிலேதான் பிறந்தார்

அவர் செல்வச் சீமானின் சீமந்தபுதல்வனாகப்பிறக்கவில்லை!

ஓர் அன்றாடங்காய்ச்சியாகத்தான் பிறந்தார்! இல்லத்தில் உள்ளவர்கள் வயிற்றைக் கழுவ அவர் தந்தை இராணுவத்தில் பணி ஆற்றினார்,

வீட்டின்செலவுகளுக்கோ தேவையான அளவு வருவாய் இல்லை.

எனவே அவரை ஈன்றெடுத்த அன்னை தையல் வேலை செய்து வீட்டைப் பராமரிக்கும் நிலை இருந்தது.

சின்னஞ் சிறுவன் ஆக இருக்கும் போதே அவர் தாயைஇழந்தார். வாழ்வில் தன் ஒரே பற்றுக்கோடாக இருந்த தன் தந்தையையும் இழந்தார்.

அவர் இந்தப் பரந்த உலகிலே 'அநாதையாக ஆக்கப்பட்டார்.

குடும்ப நண்பர்கள் அவருக்கு உணவு,உடை, தங்க இடம் அளித்தனர்,

பல்கலைகள் பயின்றார். வகுப்பிலே அனைத்துப் பாடங்களிலும் சிறப்புற மதிப்பெண்கள் பெற்று ஒளிவிட்டுப் பிரகாசித்தார்.

படிக்கும் போதே அவருக்கு விளையாட்டில்- விளையாட்டுப் போட்டிகளில் ஆசை.

இசையில் அவருக்குத் தனியாக ஈடுபாடு இன்னொரு சிறப்பு.

அவருக்கு நடிப்புத் துறையிலேஓர் அலாதியான விருப்பம்.

தானே நாடகங்கள் எழுதி. இயக்கி, நடிப்பார் ஆம் அவர் சின்னஞ்சிறுவயதிலே நம் தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவர் அவர்களைப் போன்ற வறுமையில் உழன்றவர். நடிப்பில் பக்குவம் பெற்றவர்.

எனவேதான் அவருக்குப் பசியின் கொடுமையும் முதல்வர் டாக்டர் புரட்சித் தலைவர் அவர்களை போன்றே புரிகின்றது.

நடிகராக வேண்டும் என்பது அவர் இளமைப்பருவப் பேரவா.

ஒரு நடிகராக வேண்டும் என்பது அவர்இதய வீணை மீட்டிய இனிய கானம்.

ஆனால்இயற்கைஅவரை வேறு திக்குநோக்கிஅழைத்துச்சென்றது.

போலந்து நாட்டில் பிறந்த அவர் குரு ஆக பாதிரியார் ஆக விரும்பினார். அதற்காகப் பயிற்சி பெற்றார்.

அந்த நேரத்திலேதான் போலந்தைப் போர் மேகங்கள் சூழ்ந்து நின்றன அவர் பாதிரியார் ஆகும் பயிற்சியை இரவில் செய்வார்.

பகலில், அவர்பிழைப்புக்காக ஓயாது உடல்உழைப்பு புரிந்தார்.

கல் உடைக்கும் தொழிலாளியாக அவர் பணி செய்தார்.

போலந்தின் வாட்டும் குளிரிலிருந்து தன்னை மீட்க, உடலெல்லாம் எண்ணெய் தடவிக் கொண்டு கற்பாறைகளை உளி கொண்டு உடைத்து, அதன் வாயிலாக வந்த வருமானத்தைக் கொண்டு வயிற்றைக் கழுவினார்.

போப் ஜான் பால் IIக்கு மக்கள் பால் உள்ள அன்பு அணை கடந்தது.

இன்று இத்தனை பெரிய பதவியில் இருந்தாலும், காவல்துறையையும் மீறிக் கொண்டு மக்கள் வெள்ளத்தை நோக்கி ஓடி விடுவார்.

மனித உள்ளங்களைக் கொள்ளை கொண்டு மனிதர்களைப் பிடிக்கும் கலையை அவர் கற்றிருக்கிறார்.

அவர் இன்று தமிழ்கூறும் நல்லுலகில் அமைதியும் சாந்தமும் தவழ அருளும் பொருளும் பொங்கிப் பொழிய ஆசியும் வாழ்த்தும் நல்க வருகின்றார்.

நம் தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவர் அவர்கள் போப்பாண்டவர் வருகை சீரிய பாங்கில் அமைய மேற்கொண்டுள்ள முயற்சிகள் காலத்தால் மறக்கமுடியாதவை ஆகும்.

போப்பாண்டவரின் ஏழ்மை, இளமைப்பருவம், அவர் நடிகன் ஆகவேண்டும் என்ற ஆசை, மக்கள் பால் அன்பு காட்டும் பாங்கு-இவை நம் புரட்சித் தலைவர் அவர்களை ஈர்த்ததில் வியப்பில்லை

வாழ்க புனித போப் ஜான்பால் II

வாழ்க பல்லாண்டு பல்லாயிரத்தாண்டுகள் என நாமும் வாழ்த்துவோம்.

## போப் வருகை: போக்குவரத்து சீரமைப்பு

சென்னை, பிப். 3— சென்னை நகருக்குவரும் 5-ந் தேதி போப்வருவதையொட்டி குறிப்பிட்ட சாலைகளில் வாகனங்கள் செல்வதற்கு தடைவிதிக்கப்பட்டுள்ளது. அண்ணா சாலையில் காலை 11 மணி முதல் பகல் 1 மணிவரை. வாலாஜா சாலையில் பகல் 12½ மணிமுதல் 1 மணிவரை காமராசர் சாலை, சாந்தோம் சாலையில் பகல் 12½ மணிமுதல் இரவு 7½ மணிவரை படேல் சாலையில் மாலை 6½ மணி முதல் 7½மணி வரை வாகனங்கள் செல்லதடை விதிக்கப்பட்டுள்ளதாக கமிஷனர் தேவாரம் கூறினார்.

குறிப்பிட்ட நிகழ்ச்சிகளுக்கு கார் பாஸ் பெற்றவர்கள் நிகழ்ச்சிக்கு முன்னதாக வரும்படியும் தேவாரம் கேட்டுக் கொண்டுள்ளார்.

## கடத்தல் சந்தனகட்டை பறிமுதல்

வேலூர், பிப். 3— ஜவ்வாது மலைக்காட்டிலிருந்து திருட்டுத்தனமாக லாரியில் கடத்திவரப்பட்டதாக ரகசியத் தகவல் கிடைத்ததின் பேரில் 1221 கிலோ எடையுள்ள சந்தனக் கட்டையைவனப் பாதுகாப்புப்படையினர் உதவி வனப்பாதுகாவலர் கோவிந்தராஜுலு தலைமையில்கணியம்பாடியிலிருந்து 3 கி மீ. தொலைவில் கன்னிகோயில் என்ற இடத்தில் கைப்பற்றினர்.

கடத்தல்காரர்கள்ஆந்திராவைச்சேர்ந்தவர்கள் நான்கு குற்றவாளிகளில் இருவர் தப்பி ஓடிவிட்டனர், இரு குற்றவாளிகள் பிடிபட்டனர். குற்றவாளிகளின் பெயர்கள்பியாரு(வயது35 சபாபதி (வயது 33) இவர்கள்ஆந்திராவிலுள்ள பலமனேரியைச் சேர்ந்தவர்கள் பிடிப்பட்ட சந்தனக்கட்டைகளின் மதிப்பு 68 ஆயிரத்து 376 ரூபாய். மேற்படி இரு குற்றவாளிகளும் வேலூர் முதல் வகுப்பு ஜுடிசியல் மாஜிஸ்திரேட் முன்னிலையில் ஆஜர்படுத்தப்பட்டனர். மேலும் புலன் விசாரணை மேற்கொள்ளப்பட்டு வருகிறது.

## சாராய காண்டிராக்ட் பிரச்சினை: கர்நாடக அரசில் நெருக்கடி

பெங்களூர், பிப். 3— சாராயத்தை புட்டியில் அடைப்பதற்கான காண்டிராக்ட் விவகாரத்தில் ஐகோர்ட் கொடுத்துள்ள தீர்ப்பை தொடர்ந்து கர்நாடக அரசில் நெருக்கடி ஏற்பட்டுள்ளது.

கர்நாடக மாநிலத்தில் நடந்துவரும் ராமகிருஷ்ண ஹெக்டே தலைமையிலான அமைச்சர்களுக்கு மந்திரி சபைக்கு இப்போது நெருக்கடி ஏற்பட்டுள்ளது.

சாராயத்தை புட்டிகளில் அடைப்பதற்கான காண்டிராக்டுகள் கொடுக்கப் பட்டதில் சில முறை கேடுகள் நடந்ததாகக் கர்நாடக ஐகோர்ட்டில் சிலர் வழக்கு தொடர்ந்தனர். காண்டிராக்ட் கொடுத்ததில் முறை கேடுகள் நடந்துள்ளது என்றுதீர்ப்பில்திட்டவட்டமாகக் கூறவில்லை. ஆனால் சில விவரங்கள் அரசின் போக்கை லேசாக கண்டிக்கும் வகையில் உள்ளது. இது குறித்து எதிர் கட்சியினர் ஹெக்டே அரசுக்கு கண்டனம் தெரிவித்திருக்கிறார்கள்.

காண்டிராக்ட் கொடுத்ததில் சட்டவிதி முறைகள் முறையாக பின் பற்றப் பட்டதா என்பதை ஐகோர்ட் தனது தீர்ப்பில் குறிப்பிட்டுள்ளது.

ஆனால் வழக்கை தாக்கல் செய்தவர்கள் தங்களது நோக்கத்தை வலியுறுத்தவில்லை. முதல் அமைச்சர் ஹெக்டே மற்றும், செய்தித்துறை அமைச்சர் ஜீவராஜ் ஆல்வா ஆகியோர் மீது கூறியிருந்த தனிப்பட்ட குற்றச்சாட்டுகளை அவர்கள் வாபஸ் பெற்று விட்டனர்.

இந்தநிலையில் முதல்வர் மீதோ அமைச்சர் மீதோ குற்றம்சாட்டப்படவில்லை இருப்பினும்கர்நாடகசட்ட சபையில் இந்தப்பிரச்சினை எழுப்பப்படும் என்று தெரிகிறது ஹெக்டே அரசுக்கு விரோதமாக அப்போது சில தீர்மானங்கள்சொண்டு வரப்படலாம் என்றும்தெரிகிறது.

## மதுரையில் தீவிபத்து

மதுரை, பிப். 3— மதுரை குட்ஷெட் பகுதியில் நிறுவனம் ஒன்றில் ஏற்பட்ட தீவிபத்தினால் 10லட்சம்ரூபாய்மதிப்புள்ள பொருட்கள் சேதமடைந்தன.

# வெள்ளை மாளிகை அறிவிப்பு சில மணிகளில் பொய்யானது

வாஷிங்டன், பிப். 3— கரீபியன் கடற்பகுதியிலுள்ள குட்டி நாடான ஹெயித்தி பற்றி அமெரிக்க வெள்ளை மாளிகை அறிவித்த அறிவிப்பு சில மணிநேரத்திலேயே பொய்யானது.

கரீபியன் கடற்பகுதியிலுள்ளதுஹெயித்திஎன்ற குட்டித்தீவு இந்தத் தீவை கடந்த 15 வருடங்களாக ஜீன்-கிளாட் - டுவாலியர் என்பவர் ஆண்டுவருகிறார் அதுமட்டுமின்றி தனது வாழ்நாள் முழுவதும் தானே இந்நாட்டின் ஜனாதிபதி என்றும் அறிவித்து விட்டார்.

இதற்கிடையில் இந்நாட்டிலிருக்கும் அமெரிக்க தூதர் டுவாலியர் ஆட்சி கவிழ்க்கப்பட்டதாக வெள்ளை மாளிகைக்கு தகவல் கொடுத்தார்.

வெள்ளை மாளிகையும் இந்தச் செய்தியை வெளியிட்டது. இதைக் கேட்ட நூற்றுக்கணக்கான ஹெயித்தி மக்கள் நியூயார்க், மியாமி, வாஷிங்டன் ஆகிய நகர்களில் ஊர்வலம் நடத்தி மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கினர்.

ஆனால் அடுத்த சில மணிகளிலேயே டுவாலியர் தூக்கி எறியப்படவில்லை. அவரே ஜனாதிபதியாக இருக்கிறார் என்று வெள்ளை மாளிகைக்கு தகவல் கிடைத்தது. வெள்ளை மாளிகையின் அறிவிப்பு சில மணிகளிலேயே பொய்யானது.

ஹெயித்தி அதிபர் டுவாலியரும் டெலிவிஷனில் தோன்றி பேசினார். குரங்குவால் போல் தான் ஆட்சியில் உறுதியாக ஒட்டிக் கொண்டிருப்பதாகவும் அவர் கூறினார் இதற்கிடையில் ஹெயித்தி தலை நகரில் பதட்ட நிலை நிலவியது நூற்றுக் கணக்கானோர் கைது செய்யப்பட்டனர்,

# நெஞ்சம் மலரும் ஜம்ஜம் உறவு

கலைஞானம் வழங்கும் பைரவி எண்டர் பிரைஸஸ் 'ஜோதி மலர்' படத்தில் மேஜர் சுந்தர்ராஜனின் புதல்வர் ராஜா டிஸ்கோ நடனக்காரராக அறிமுகமாகிறார். இவருக்குமேஜர் ராஜா என்ற பெயர் வைக்கப்பட்டுள்ளது.

இவர் ஆடும் டிஸ்கோ நடனம சத்தியா ஸ்டுடியோவில் அமைக்கப்பட்ட பிரம்மாண்ட அரங்கில் படமாக்கப்பட்டது.

இதற்தான பாடலைகலைஞானம் எழுத, மலேசியா வாசுதேவன், வாணிஜெயராம் பாட, சங்கர்கணேஷ் இசையமைத்துள்ளனர். நடனக் காட்சியை சுந்தரம் அமைத்தார்.

அப்பாடலின் முதலடிகள்—

"ஜம் ஜம் ஜம் உறவிலே
நெஞ்சம்தான் மலருதே
நாளெல்லாம் பழகலாம்
நாமினி மகிழலாம்'

என்பதாகும்.

மேஜர் ராஜாவுடன் சேர்ந்து படத்தின் கதாநாயகிகள் ஜீவிதா, ஸ்ரீஜெயா, சந்தியா ஆகியோர் நடனமாடினார்கள்.

## காவிய காதல்

ஐ. ஏ. டி. கம்பைன்ஸ் என்ற பட நிறுவனம் காவிய காதல் என்ற தலைப்பில் ஒரு படத்தை தயாரிக்கிறது. மலையடிவாரத்தில் வசிக்கும் பழங்குடி மக்கள் சட்ட-திட்டங்கள் ஏதும்அறியாதவர்கள். அவ்வூர் ஜமீன்தாருக்கு கட்டுப்பட்டவர்கள். அந்த ஊருக்கு வரும் சினிமா கோஷ்டியைக் கண்டதும் சினிமா மோகத்தால் தன் மனதை பறிகொடுத்து கெட்டு சீரழிகிறாள், அந்த ஊரின் பண்ணையார்மகள். இடையில் நடக்கும் சம்பவங்களை வைத்துஉருவாக்கப்படும் இப்படத்தின படப்பிடிப்பு வருகிற 27-ந் தேதி முதல் கோவை மாவட்டம் மேட்டுப்பாளையம் ஊட்டி ஆகிய இடங்களில் நடைபெறுகிறது.

ஒளிப்பதிவு மோகன்லால் (பம்பாய்) படத் தொகுப்பு கே. பி. புத்திரன். தயாரிப்பு நிர்வாகம் நாகை சுந்தரம்.

சுப்பராஜா தயாரிப்பு மேற்பார்வையில் வளரும் இப்படத்தின் கதை, திரைக்கதை, வசனம் எழுதி தயாரித்து டைரக்ட் செய்கிறார் கே. கே. புனியப்பு.

★★ ஸ்ரீதேவி
படம்:- 'நான்அடிமைஇல்லை'

★★ ராதா - கிருஷ்ணா
படம்:- சிம்மாசனம்

# ரஜினிகாந்த்துக்கு ஸ்ரீதேவி காதல் தூது

கன்னட நடிகர் துவாரகேஷ் தயாரிக்கும் துவாரகேஷ் சித்ராவின் 'நான் அடிமை இல்லை' படத்திற்காக ரஜினிகாந்த் ஸ்ரீதேவி இருவரும் கலந்துகொண்ட பாடல் காட்சி ஒன்று பம்பாய் ஜுஹு கடற்கரையில் படமாக்கப்பட்டது. விஜய் ஆனந்த் இசை அமைத்த

"போனா போகுது
பொடவ பறக்குது
புடிச்சிக்க:
தானா கனிஞ்சது வீனா
போகுது எடுத்துக்க
என்று ஸ்ரீதேவி பாட
போனா போகுது
பொடவ பறக்குது
புடிச்சுகிறேன்
தானா கனிஞ்சது
வீணா போகுதுஎடுத்துக்
கிறேன்"

—என்று பதிலுக்கு ரஜினிகாந்த் பாட, இக்காட்சி பம்பாய் ஜுஹு கடற்கரையில் இயக்குனர் துவாரகேஷ் அவர்களால் படமாக்கப்பட்டது. தேவி பிரசாத் ஒளிப்பதிவை கவனிக்க, ஏ.எல். நாராயணன் வசனமெழுத தொடர்ந்து படப்பிடிபபு நடந்துவரும் இப்படம் அடுத்த மாதம் திரைக்கு வருகிறது.

## மீண்டும் சிவாஜி-பத்மினி ஜோடி

1970 ல் 'இருதுருவம் வெற்றிப் படத்தில் இணைந்து நடித்தசிவாஜி-நாட்டியப் பேரொளி பத்மினி வெற்றி ஜோடி மீண்டும் கே.ஆர்.ஜி. பிலிம் சர்க்யூட் தயாரிக்கும் "தாய்க்கொரு தாலாட்டு" வண்ணப்படத்தில் இணைந்து நடிக்கின்றார்கள்.

மலையாளத்தில் 23 வெற்றிப்படங்களை அளித்துள்ள பாலசந்திரமேனன் முதன்முறையாக தமிழில் இப்படத்திற்குகதை-திரைக்கதை அமைத்து இயக்குகிறார்.

பிப்ரவரி 26ந்தேதிமுதல் ஊட்டியில் படப்பிடிப்பு தொடங்கவிருக்கும் இப்படத்தில்சிவாஜி; பத்மனி" ஜோடியுடன் விசு-நிழல்கள் ரவி, பாண்டியன், விஜயகுமார்,சுஜாதா, இளவரசி, ராஜலட்சுமி, ரோகிணி, இவர்களுடன்'ஆண்பாவம். பாண்டியராஜன் இணைந்து நடிக்கிறார்.

பிரமாண்டமான முறையில் தயாரிக்க திட்டமிடப்பட்டுள்ள இப்படத்தின் இசையை இளையராஜா ஏற்கவசனத்தைஆர்செல்வராஜ் தீட்டுகிறார். ஒளிப்பதிவு ஜெயன் வின்சன்ட் கலை. ராமசாமி நடனம் புலியூர் சரோஜா

★★ விஜயகாந்த்
அம்பிகா
படம்:-
சந்தர்ப்பங்கள்

# கலை விருந்து

## நடிகர்களுக்கு சோதனை தரும் முதுமலைக்காடு

மந்த்ராலயா சினிகிரியேஷன்ஸ் என்ற நிறுவனத்தின் சார்பில் வி. என். ஜெ. மணிவண்ணனும் கே. அருணும் தயாரிக்கும் "சிறைப்பறவை" படத்தின் படப்பிடிப்பிடிப்பு முதுமலைக்காட்டில் நடந்தது.

பேபி சாலினி யானை மீது அமர்ந்து உல்லாசமாக சவாரி வருவதுபோல் காட்சி. டைரக்டர் மனோபாலா, "பயப்படாமல் சவாரி செய்வாயா?' என்று சாலினியிடம் கேட்க, "துணிச்சலாக யானை மீது உட்கார்ந்து வருவேன்" என்றாள்.

காட்சி ஒத்திகையின் போது யானைக்கு திடீரென மதம் பிடித்து தாறுமாறாக ஓட, அதன் மேல் அமர்ந்திருந்த சாலினி "ஓ' வென அலறியபடி தலைக்குப்புற கீழே விழுந்தாள். யானை காமிராவை நோக்கி வர காமிரா உமன் பி. ஆர். விஜயலட்சுமி பதற்றத்தில் காமிராவிலிருந்து விலக வலது கண் கீழ் ரப்பையில் காமிரா குத்தி ரத்தம் வர ஆரம்பித்தது

எதிர் பாராது நடந்த இந்த நிகழ்ச்சியால் அனைவரும் திகைத்து நிற்க, சாலினி விழுந்த இடத்தை நோக்கி ஓடினார் கதாசிரியர்கலைமணி அவள்விழுந்த இடத்தைச் சுற்றிலும் மரம் அறுக்கப்பட்டு வேர் மட்டும் வெளியே நீட்டிக் கொண்டிருந்தன. நல்ல காலம்!சாலினி மண் தரையில் விழுந்திருந்தாள் தலையில் அடிபட்டு ரத்தம் கொட்ட மயங்கியிருந்தாள்

தயாரிப்பாளர் தம்பி, லட்சுமி நாராயணன், மனோபாலா, கலைமணி, ஆகியோர் இருவரையும் காரில் அழைத்து அருகிலிருந்த ஆஸ்பத்திரிக்குச்சென்றனர்.

அடிபட்ட இடத்தைப் பரிசோதித்த டாக்டர் சாலினிக்கு அதிர்ச்சியால் மயக்கம் ஏற்பட்டிருப்பதாகக் கூறினார் இருவருக்கும் தையல் போட்டு ஒருவாரம் ஓய்வெடுக்கும்படி கூறி ஆஸ்பத்திரியில் "அட்மிட் செய்து கொண்டார்,

படப்பிடிப்பு ரத்து செய்யப்பட்டு அனைவரும் சென்னை திரும்பினர். நான்கு நாட்கள் ஓய்வெடுத்த பேபிசாலினியும் விஜயலட்சுமியும் சென்னைக்குத் திரும்பி ஓய்வெடுத்து வருகின்றனர்.

சென்ற மாதம் இதே இடத்தில் இதே படப்பிடிப்பில் தான் விஜயகாந்த் சண்டைக்காட்சியில்கலந்து கொள்ளும் போது காலில் பலத்த அடிபட்டு சிகிச்சை பெற்றார்.

அதனால் விடுபட்ட காட்சிகளை வேறெரு பகுதியில் அடுத்த மாதம் நடந்த தீர் மானித்திருக்கின்றனர்

இப்படத்தில் விஜயகாந்த், ராதிகா, பேபி சாலினி. மலேசியாவாசுதேவன், வெண்ணிறஆடை மூர்த்தி, உசிலைமணி, மற்றும் பலர் நடிக்கிறார்கள் இளையராஜா இசை அமைக்கும் இப்படம் முடிவடையும் கட்டத்தை நெருங்கி இருக்கிறது.

## இந்தியமணமகள்

சோவியத், இந்திய கூட்டுத் தயாரிப்பில் 'இந்திய மணமகள்' படம் உருவாக்கப்படுகிறது.

இந்தத் தயாரிப்புக்கான செட்டுகளை மாஸ்பிலிம் ஸ்டுடியோ அமைத்துத்தருகிறது. சோவியத்ஸ்விடன் நாடும் இணைந்து புகழ் பெற்ற ஸ்வீடிஸ் எழுத்தாளர் அஸ்ட்ரிட் விண்ட்கிரென் எழுதிய மியோ மின்மியோ என்ற கதையை படமாக எடுக்கின்றனர்.

# இந்தவார... இயக்குனர்

-: ராஜசேகர் :-

மலையூர் மம்பட்டியான் படம திரையுலக வாழ்வில் பலருககு திருப்பம் தந்த படம் இந்தப் படத்தை இயக்கியதன் மூலம் புகழ் பெற்ற இயக்குனர்கள் வரிசையில் இடம் பெற்றவர் ராஜசேகர்.

ஒரு வெற்றிப் படத்துடன் நில்லாது தொடர்ந்து காக்கிச் சட்டை, படிக்காதவன் இப்படி பல வெற்றிச் சித்திரங்களை படைத்த ராஜசேகர் இப்போது "கண்மணியே பேசு" படத்தை படைத்துள்ளார்.

இந்த வார இயக்குனர் வரிசையில் இடம் பெற்றுள்ள ராஜசேகர் என்ன சொல்கிறார் என்பதை நீங்களும் கேளுங்களேன்.

கேள்வி:- சார் நீங்கள் இந்த சினிமா உலகிற்கு வரவேண்டுமென்ற ஆசை எப்படி ஏற்பட்டது?

ராஜசேகர்:- சினிமா உலகிற்கு வரவேண்டுமென்ற ஆசை இருந்தது. ஆனால் அதை வெறியாக கொண்டோஅல்லது அதற்காக பட்டினி கிடந்தோ செய்யவில்லை.

அரசாங்க உத்தியோகம் பார்த்துக் கொண்டிருந்த நான்அந்தபணியில்இருந்து கொண்டே சினிமா துறையில் கவனம் செலுத்தினேன் ஒருநாள்திடீரென்று ஆபீசுக்கு முழுக்கு போட்டேன். இதைக் கேட்டு என் மனைவி ஆச்சரியப்பட்டாள், நாமும் ஏதாவது செய்ய வேண்டும் என்ற உணர்வில் நான் பார்த்து வந்த அரசாங்க வேலைக்கு முழுக்கு போட்டு விட்டு இத்துறையில் கவனம் செலுத்தினேன்.

கேள்வி:- எத்தனை படங்களில் இது வரை சம்பந்தப்பட்டீர்கள்?

பதில்:- 25 படங்களில் என்பங்கு உள்ளது. இதில் 15 படங்களை இயக்கியுள்ளேன்.

கேள்வி:- நீங்கள் இயக்கிய படங்களில் உங்கள் மனதைத் தொட்டது எது?

பதில்:- என் வாழ்க்கை கதவை திறந்து விட்டதால் மலையூர்மம்பட்டி யானும் என்தாகத்திற்கேற்ப செய்திருப்பதால் கண்மணியே பேசு படமும் என்னைப் பெரிதும் கவர்ந்தன 'பவுர்ணமிநிலவில், படத்தில் நான் படைத்த பாம்புக்காரன் மகன் பாத்திரம் எனக்கு மிகவும் பிடித்தது

கேள்வி:—சமீபகாலத்தில் திரையுலகில் தாங்கள் ஏதாவது வித்தியாசம் காண்கிறீர்களா?

பதில்:— நிச்சயமாக சினிமா ரகசியம் என்பது முன்பு காப்பாற்றப்பட்டு வந்தது. இப்போதுவீதிக்கு வந்துவிட்டது. உதாரணமாக முன்பெல்லாம் ஒரு தெரு காட்சி படமாக்க வேண்டுமென்றால் செட் போட்டு எடுப்பார்கள். ஆனால் இப்போது தெரு செட் போடவேண்டுமென்றால் எந்தத் தயாரிப்பாளரும் ஒத்துக்கொள்ளமாட்டார். மற்றபடி டெக்னிக்கலாக நல்ல முறையில் வளர்ந்துள்ளது.

கேள்வி : வீடியோ பற்றி தங்கள் கருத்து என்ன?

பதில் : வளர்ந்து வரும் விஞ்ஞானம் என்ற முறையில் வீடியோவை புறக்கணிக்க முடியாது. ஆனால் அது ஒரு தொழிலின் நசிவுக்கு காரணமாக இருந்து விடக் கூடாது. விடியோ என்பது சினிமா உலகைப் பொருத்த வரையில் பெரிய அச்சுறுத்தலாக உள்ளது. ஆனால் விடியோவை கண்டு பிடித்தவர்கள் தான் அது சினிமா உலகை அழிப்பதை தடை செய்ய முடியும் வீடியோவினால் ஏற்பட்டிருக்கும் அச்சுறுத்தலிலிருந்து சினிமா உலகையாரும் விஞ்ஞானிகள் காப்பாற்ற முன் வந்தால் மாலை போட்டு வரவேற்க தயாராக இருக்கிறோம்.

கேள்வி:- 'கண்மணியே பேசு' படம் பற்றி சொல்லுங்களேன்.

அக்கா தங்கைக்கிடையே நடைபெறும் போராட்டத்தை வைத்து அமைக்கப்பட்டது இதன் கதை வில்லன் என்ற கதாபாத்திரம் இல்லாது படைக்கப்பட்ட கதை நகைச்சுவைக்கென்றும் தனியாகபாத்திரம் படைக்கப்படவில்லை.

இந்தப்படத்தின் மூலம் ராஜசேகர்என்றடைரக்டர் பாராட்டப்படுவார் என்ற நம்பிக்கை இருக்கிறது. எல்லாவகையான ரசிகர்களையும் திருப்தி செய்யும் வகையில் அதே சமயத்தில் தந்தையும் மகளும் கூச்சப்படாமல் பார்க்கும் வகையில் எடுக்கப்பட்ட படம்.

# "நாடோடிமன்னனை" நாற்பதுமுறை பார்த்தவர்

## இயக்குனர் கடலூர் புருசோத்தமன்

நான் குடித்துக் கொண்டே இருப்பேன் என்ற படத்தை தமிழ் திரையுலகிற்கு தந்து குடியின் கொடுமைகளை எடுத்துக் காட்டியவர் கடலூர் புருசோத்தமன். தற்போது தமிழின் பெருமையை பறைசாற்ற காலம்மாறுதுஎன்ற வண்ணப்படத்தை உருவாக்கிவருகிறார்.

அவரது திரையுலகஅனுபவம் பற்றிய நமது கேள்விகளுக்கு பதிலளித்து அவர் கூறியதாவது:-

கேள்வி:- சினிமாவுக்கு எப்படி வந்தீர்கள்?

பதில்:- சினிமா உலகிற்கு வரவேண்டுமென்ற உணர்வு ஆறு வயதிலேயே வந்தது, மேலும் சிறுவயது முதல் நான் முதல்வர் எம். ஜி. ஆரின் ரசிகன் நாடோடி மன்னன் படத்தை நாற்பது முறை பார்த்தேன். மலைக்கள்ளன் படத்தை இருபத்தி ஐந்து முறை பார்த்தேன். எம்.ஜி.ஆரைப்பற்றி யாராவது தவறாகக் கூறினால் உடனே அடித்து விடுவேன் அந்த அளவிற்கு அவர்மீது பற்று வைத்துள்ளேன்.

எங்கள் ஊரில் ஒரு கொட்டகையில் "தோஆங்கேன் பாரா ஹாத்" படம் நடைபெற்றது. அதைப் பார்த்து தேம்பி தேம்பி அழுதநான் அது போன்ற ஒருபடத்தை இயக்க வேண்டுமென்று உறுதி கொண்டேன்.அந்த ஆசை வளர்ந்து சினிமாவுக்கு வந்தேன்.

துவக்கத்தில்நான்,பாரதிராஜா, பாலகுருஆகியோர் இயக்குனர் கிருஷ்ணனிடம் பணியாற்றினோம் பின் அவிநாசி மணியிடம் சேர்ந்தோம். பாரதி ராஜாவும் பாலகுருவும் பிரிந்தனர் அதைத் தொடர்ந்து நானும் தனியாக செயல்படும் முயற்சியில் ஈடுபட்டேன்.

கேள்வி:- திரைக்கதைவசனம் எழுதிய முதல்படம் எது?

பதில்:- கே. ஆர். விஜயாவின் தர்மபத்தினி படத்திற்கு திரைக்கதை வசனம் எழுதினேன். ஆனால் அது வெளிவரவில்லை.

கேள்வி:— நான்குடித்து கொண்டே இருப்பேன் படத்தை எடுக்க காரணம் என்ன?

பதில்:— குடிப்பவர்களை நாடு கடத்த வேண்டும் என்று முதல்வர் புரட்சித்தலைவர்ஒருமுறை கூறியவார்த்தை என் மனதைத்தொட்டது அதன் அடிப்படையில் குடியின் கொடுமையை விளக்கும் நான் குடித்துக்கொண்டே இருப்பேன், படத்தை இயக்கினேன். அந்தப்படத்தை முதல்வர்புரட்சித்தலைவரே துவக்கிவைத்தார்.

கேள்வி:- மறக்க முடியாத நிகழ்ச்சி பற்றி?

பதில்:- பாக்தாத் திருடன் படம் வந்தபோது முதல்வர் விழுப்புரத்திற்கு வந்திருந்தார். அப்போது நான்சின்னப்பையன்.முதல்வர்எம்.ஜி.ஆரின் படத்தை நானே வரைந்து அவரிடம் சென்று கையொப்பம் வாங்க வேண்டுமென்று துடித்தேன். இதற்காக ஸ்குரூடிரைவரை எடுத்துக் கொண்டு எலெக்ட்ரீஷியன் போல் சென்று புரட்சித்தலைவரை சந்தித்து அவரது கையொப்பம் பெற்ற சம்பவம் இன்றும்மறக்க முடியாதது.

கேள்வி:— இன்றைய தமிழ் சினிமா உலகம்பற்றி தங்கள் கருத்து என்ன?

பதில்:— ஹாலிவுட்டிற்கு அடுத்தபடியாக கூறுமளவு தமிழ் சினிமா உலகம் வளர்ந்துள்ளது.

திறமையானவர்களுக்கு தமிழ் சினிமா உலகில் என்றும் வாய்ப்புண்டு மேலும் சென்சார் நமக்கு பாதுகாப்பாக இல்லை. பாதிப்பாகத்தான் இருக்கிறது.மாநிலத்துக்கு மாநிலம் அல்ல.படத்துக்குபடம் சென்சார் வேறுபடுகிறது தேசியஅளவில் இதற்கு ஒரு மாற்றம் ஏற்படாவிடில் எதிர்காலத்தில் நிறைய தொல்லைகள் ஏற்படும்.

அடுத்துவீடியோ,சினிமாவுக்கு பெரிய அச்சுறுத்தலாக இருக்கிறது. வீடியோ திருட்டில்ஈடுபடுபவர்களை நாடுகடத்த வேண்டும். கொலைக் குற்றத்தைவிட இதைக் கடுமையான குற்றமாக கருதவேண்டும்.

கேள்வி:- உங்கள் லட்சியம் என்ன?

பதில்:-மக்களுக்குகருத்து சொல்லும் படங்களை எடுப்பது. குடியின் கொடுமையை விளக்கிமுதல்படம் எடுத்தேன். இப்போது ஒருமைப்பாட்டை சொல்லும் காலம் மாறுது படத்தை எடுக்கிறேன்.

இவ்வாறு கடலூர் புருசோத்தமன் கூறினார்.

★★ மோகன் - நதியா
படம்:- 'உயிரே உனக்காக'

★★ விஜயகாந்த் - ஜீவிதா
படம்:- எனக்கு நானே நீதிபதி